# المرشد للحج والعمرة

تأليف عمر شريف بن عبد السلام

# ஹஜ் - உம்ரா வழிகாட்டி

தொகுப்பு:

உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்



# About This Book

| | |
|---|---|
| Name | : **HAJ - UMRAH VAZHIKATTI** |
| Subject | : The Guide for Haj and Umrah |
| Author | : Mufti **A. Omar Sheriff** Qasimi |
| Lanuguage | : Tamil |
| Edition | : 1st, October 2011<br>2nd, February 2013 |
| Size | : Crown 1/8 |
| Pages | : 56 |
| Copies | : 3000 |
| Printed by | : Patel Graphics, Chennai-06. |

Price: **Rs. 75/-**

Published by

**DARUL HUDA**
INVITE EDUCATE PUBLISH CONTRIBUTE

New No. 211, Old No. 102, I[st] Floor,
Linghi Street, Mannady, Chennai - 600 001.
Phone: 044-2524 7866 Cell: 98401 74121, 98844 69044.
muftiomar@gmail.com www.darulhuda.net

# பதிப்புரை

அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அல்லாஹ்வின் தூதர் மீதும் அவர்களுடைய குடும்பத்தார், தோழர்கள் அனைவர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் நிலவட்டும்.

ஹஜ், உம்ராவைப் பற்றி எழுதப்பட்ட பல அரபி நூல்களிலி ருந்து ஹஜ், உம்ரா உடைய கிரியைகள், செயல்முறைகள் வரைப் படங்களுடன் தொகுக்கப்பட்டு, ஒரு சிறு கையேடாக உங்கள் முன் சமர்ப்பிக்கப்படுகிறது.

பாமர மக்கள் எளிதில் புரிய வேண்டும், நூல் சுருக்கமாக இருக்க வேண்டும் என்பதற்காக ஆதாரங்கள் தவிர்க்கப்பட்டுள்ளன. இதில் கூறப்பட்டுள்ள அனைத்தும் குர்ஆன் மற்றும் சரியான ஹதீஸ்களி லிருந்து எடுக்கப்பட்டவையே ஆகும்.

அல்லாஹ் இந்நூலை ஏற்றருள் புரிவானாக! நிச்சயமாக அவன் நன்கு செவியுறுபவன், நன்கு அறிந்தவன்.

இந்நூலில் ஏதேனும் தவறுகள், குறைகள் இருப்பின் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்கட்டும்.

இந்நூல் வெளிவருவதற்கு ஒத்துழைத்த சகோதர சகோதரிகள், இதை தட்டச்சு செய்து தந்த சகோதரர் அப்துல் பாரி (மகாராஜபுரம்), நூலை அழகிய முறையில் வடிவமைத்த சகோதரர் ரஃபீக்குல் அமீன் (வடகரை) மற்றும் மார்க்கப் பணிகளுக்கு உதவிடும் அனைத்து முஸ்லிம்களுக்கும் நற்கூலிகளையும் இம்மை மறுமை நற்பேறுகளையும் நிறைவாக அல்லாஹ் வழங்குவானாக! அல்லாஹும்ம ஆமீன். அல்லாஹும்ம ஆமீன்.


உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்

குர்ஆன், சுன்னா பணியாளன்

தாருல் ஹுதா, சென்னை.



وَاَتِمُّوا الْحَجَّ وَالْعُمْرَةَ لِلّٰهِ

ஹஜ் இன்னும் உம்ராவை அல்லாஹ்வுக்காக முழுமைப்படுத்துங்கள். (அல்குர்ஆன் 2:196)

# கண்ணியமிகு மக்கா



அல்லாஹ் இந்நகரத்தின் கண்ணியத்தை வெளிப்படுத்தும் விதமாக இதன் மீது அல்குர்ஆனின் பல இடங்களில் சத்தியம் செய்கிறான்.

பாதுகாப்புப் பெற்ற, பாதுகாப்பளிக்கும் இந்நகரத்தின் மீது சத்தியமாக! (அல்குர்ஆன் 95:3)

இந்நகரத்தின் மீது சத்தியம் செய்கிறேன். (அல்குர்ஆன் 90:1)

இந்நகரத்திற்கு இப்ராஹீம் ﵇ செய்த பிரார்த்தனையை அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

என் இறைவா இந்த நகரத்தை பாதுகாப்புப் பெற்றதாக, பாதுகாப்பு அளிக்கக்கூடியதாக ஆக்குவாயாக! (அல்குர்ஆன் 14:35)

நபி ﷺ ஹிஜ்ரத்திற்கு முன் மக்காவை நோக்கி கூறினார்கள்:

அல்லாஹ்வின் மீது சத்தியமாக நிச்சயமாக நீ அல்லாஹ்வின் பூமிகளில் மிகச் சிறந்ததாகும். அல்லாஹ்வின் பூமிகளில் எனக்கு மிக விருப்பமானதாகும். உன்னிலிருந்து நான் வெளியேற்றப் பட்டிருக்கவில்லையென்றால் உன்னை விட்டு வெளியேறி இருக்க மாட்டேன். (அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு அதீ ؓ, நூல்: ஸுனன் இப்னு மாஜா)



5

# புனிதமிகு கஅபா



கஅபா இது பழமை வாய்ந்த அல்லாஹ்வின் வீடாகும். உலகில் உள்ள முஸ்லிம்கள் அனைவரும் இவ்வீட்டை நேசிக்கின்றனர். ஒவ்வொரு நாளும் ஐந்து முறை இவ்வீட்டை நோக்கியே பணிவுடனும் பயத்துடனும் முஸ்லிம்கள் அல்லாஹ்வை தொழுகின்றனர். ஹஜ் மற்றும் உம்ரா வணக்கங்களை நிறை வேற்றுவதற்காக தூர தூரமான நாடுகளிலிருந்து முஸ்லிம்கள் அங்கு வருகின்றனர். கஅபாவின் சிறப்பைப் பற்றி குர்ஆனிலும் ஹதீஸ்களிலும் உயர்வாக கூறப்பட்டுள்ளது.

அல்லாஹ் கூறுகிறான்:

நிச்சயமாக மக்கள் அல்லாஹ்வை வணங்குவதற்காக முதன் முதலில் அமைக்கப்பட்ட ஆலயம் பக்கா எனும் மக்காவில் உள்ளதாகும். அது இறையருள் நிறைந்ததும் உலகத்தாருக்கு நேர்வழியுமாகும். அதில் தெளிவான அத்தாட்சிகளும் இருக்கின்றன. இப்ராஹீம் நின்ற இடமும் இருக்கிறது. எவர் அதில் நுழைகிறாரோ அவர் (பாதுகாப்பு பெற்று) அச்சமற்றவராகி விடுகின்றார். (அல்குர்ஆன் 3:96, 97)

# ஹஜ்

ஹஜ் இஸ்லாமின் ஐந்து கடமைகளில் ஒரு கடமையாகும்.

அல்லாஹ் கூறுகிறான்:

ஆகவே, அங்கு பயணம் செல்ல சக்தியுடைய மனிதர்கள் மீது அல்லாஹ்வுக்காக அந்த ஆலயத்தை ஹஜ் செய்வது கடமையாகும். எவரேனும் (இதை) நிராகரித்தால் (அல்லாஹ்வுக்கு ஒன்றும் குறைந்து விடுவதில்லை. ஏனென்றால்,) நிச்சயமாக அல்லாஹ் உலகத்தாரிடம் தேவையற்றவனாக இருக்கிறான்.

(அல் குர்ஆன் 3:97)

அல்லாஹ்வின் தூதர் ﷺ கூறினார்கள்:

இஸ்லாம் ஐந்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. (அவை):

நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை; நிச்சயமாக முஹம்மது ﷺ அல்லாஹ்வுடைய தூதராவார்கள் என்று சாட்சி சொல்வது.

தொழுகையை நிலை நிறுத்துவது.

ஜகாத் கொடுப்பது.

ஹஜ் செய்வது.

ரமழானில் நோன்பு நோற்பது.

(அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه நூல்: ஸஹீஹுல் புகாரி)

ஹஜ், உடலாலும் பொருளாலும் வசதி பெற்றவரின் மீது வாழ்க்கையில் ஒருமுறை கடமையாகும்.

அல்லாஹ்வின் தூதர் அவர்கள் எங்களுக்கு பிரசங்கம் நிகழ்த்தி னார்கள். மக்களே! உங்கள் மீது ஹஜ் கடமையாக்கப்பட்டது என்று கூறினார்கள். அக்ரஉ இப்னு ஹாபிஸ் என்ற நபித்தோழர் எழுந்து அல்லாஹ்வின் தூதரே ஒவ்வொரு ஆண்டிலுமா (ஹஜ்

செய்யவேண்டும்)? என்று கேட்டார். நான் அப்படித்தான் என்று கூறிவிட்டால் அது அவ்வாறே கடமையாகிவிடும். அப்படி கடமையானால் நீங்கள் அதை நிறைவேற்ற மாட்டீர்கள். அதை நிறைவேற்றுவதற்கு ஆற்றலும் பெற மாட்டீர்கள். ஹஜ் ஒருமுறை தான். எவர் அதிகம் செய்வாரோ அது (அவருக்கு) உபரியாகும்.

அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄ நூல்: முஸ்னத் அஹமத்)

## ஹஜ் - உம்ராவின் சிறப்பு

அல்லாஹ்வின் தூதர் ﷺ கூறினார்கள்:

“எவர் (அல்லாஹ்வின்) வீட்டை ஹஜ்ஜு செய்து அதில் ஆபாசமாகப் பேசவில்லையோ, பாவம் செய்யவில்லையோ அவர் தன் தாய் பெற்றெடுத்த நாளில் இருந்ததைப் போன்று திரும்புகிறார்.”

(அறிவிப்பாளர்: அபூஹுரைரா ﵁ நூல்: ஸஹீஹுல் புகாரீ)

அல்லாஹ்வின் தூதர் ﷺ கூறினார்கள்:

நன்மை நிறைந்த ஹஜ்ஜுக்கு சொர்க்கத்தைத் தவிர வேறு கூலி இல்லை.

(அறிவிப்பாளர்: அபூஹுரைரா ﵁ நூல்: ஸஹீஹ் முஸ்லிம்)

ஒருவர் தன்மீது ஹஜ் கடமையானவுடன் அதை விரைந்து நிறை வேற்ற வேண்டும். தாமதப்படுத்துவது கூடாது.

அல்லாஹ்வின் தூதர் ﷺ கூறினார்கள்:

எவர் ஹஜ் செய்ய நாடிவிடுவாரோ அவர் (அதை நிறைவேற்ற) தீவிரம் காட்டட்டும். ஏனெனில், ஒருவரை நோய் பீடிக்கலாம்; வாகனம் (அல்லது செல்வம்) தவறிவிடலாம்; தேவைகள் குறிக்கிடலாம்.

(அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄ நூல்: இப்னு மாஜா)

ஹஜ் மற்றும் உம்ராவை தொடர்ந்து செய்யுங்கள். அவை வறுமையையும் பாவங்களையும் நீக்கிவிடும், (கொள்ளனின்) துருத்தி இரும்பின் அசுத்தத்தை நீக்குவது போன்று.

(அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄ நூல்: திர்மிதி)

ஓர் உம்ரா செய்துவிட்டு இரண்டாவது உம்ரா செய்யும் போது அந்த இரண்டுக்கும் இடையில் உள்ள பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடுகின்றன. (அறிவிப்பாளர்: அபூஹுரைரா ﵁ நூல்: முஸ்லிம்)

## ஹஜ் செய்யும் முறை

இத்தகைய உயர்ந்த வணக்கத்தை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் காண்பித்த வழிமுறையில்தான் செய்ய வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்:

நபியே கூறுவீராக! நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். அல்லாஹ் உங்களை நேசிப்பான், உங்கள் பாவங்களை மன்னிப்பான். அல்லாஹ் மகா மன்னிப்பாளன், பெரும் கருணையாளன். (அல்குர்ஆன் 3:31)

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

என்னிடமிருந்து உங்கள் ஹஜ் கிரியைகளை கற்றுக் கொள்ளுங்கள். இந்த ஆண்டுக்குப் பிறகு நான் உங்களைப் பார்க்காமல் இருக்கலாம்.

(அறிவிப்பாளர்: ஜாபிர் ﵁ நூல்: அஸ்ஸுனனுல் குப்ரா லில்பைஹக்கீ)

நபி ﷺ அவர்கள் வழிகாட்டாத முறையில் நாம் வணக்க வழிபாடுகளை செய்தால் அந்த வணக்க வழிபாடுகள் அல்லாஹ்விடம் மறுக்கப்பட்டு நன்மையற்றதாக ஆகிவிடும்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

எவர் நம் கட்டளையில்லாத ஒரு செயலை செய்வாரோ அந்த செயல் மறுக்கப்பட்டுவிடும்.

(அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂ நூல்: ஸஹீஹ் முஸ்லிம்)

# ஹஜ் உடைய ஷர்த்துகள்

1. இஸ்லாம்

2. அறிவுத் தெளிவு

3. சுதந்திரம்

4. பருவம்

5. ஆற்றல்

6. பெண்ணுக்கு மஹ்ரம் இருத்தல்

ஷர்த்து: ஒரு வணக்கம் கடமையாகுவதற்குரிய காரணம். அக்காரணம் இல்லையெனில் அவ்வணக்கம் கடமையாகாது.

மஹ்ரம்: மணம் முடிப்பது நிரந்தரமாக தடை செய்யப்பட்டவர் (உ.ம்) தந்தை, தந்தையின் உடன் பிறந்தோர், தாய்மாமா, சகோதரன், சகோதர, சகோதரியின் பிள்ளைகள், போன்று.

# ஹஜ் உடைய ருக்னுகள்

1. இஹ்ராம்

2. அரஃபாவில் தங்குதல்

3. இஃபாழா தவாஃப்

4. ஸஃபா, மர்வாவில் ஸஃயி செல்லுதல்

ருக்னு: வணக்க வழிபாட்டின் முக்கிய அம்சம். அதை விட்டால் அந்த வணக்கம் நிறைவேறாது.

# ஹஜ் உடைய வாஜிபுகள்

1. மீகாத்தில் இஹ்ராமை ஆரம்பித்தல்

2. அரஃபாவில் சூரியன் மறையும் வரை தங்குதல்

3. முஸ்தலிஃபாவில் இரவு தங்குதல்

4. பிறை 11,12,13ல் மினாவில் தங்குதல்

5. மூன்று ஜம்ராக்களில் கல் எறிதல்

6. சிரைத்தல் அல்லது சம அளவு குறைத்தல்

7. விதாவு (இறுதி) தவாஃப் செய்தல்.

---

வாஜிபு: ஒரு வணக்கத்தின் உள் அம்சங்களில் முக்கியமான ஒன்று. அதை அவசியம் நிறைவேற்ற வேண்டும். மறந்து விட்டுவிட்டால் அதற்கு பரிகாரம் செய்ய வேண்டும்.

# ஹஜ் உடைய வகைகள்

1. தமத்துஉ: ஹஜ் உடைய மாதங்களில் முதலில் உம்ரா செய்து இஹ்ராமை முடித்து விட்டு, பிறகு புதிதாக இஹ்ராமை ஆரம்பித்து ஹஜ் செய்வது.

2. கிரான்: ஹஜ், உம்ரா இரண்டையும் ஒரே ஓர் இஹ்ராமில் நிறைவேற்றுவது.

3. இஃப்ராத்: ஓர் இஹ்ராமில் ஹஜ்ஜை மட்டும் நிறைவேற்றுவது.

ஹஜ் உடைய வகைகளில் தமத்துஉ ஹஜ்தான் சிறந்தது.

## ஹஜ் தமத்துஉ உடைய விளக்கம்

ஹஜ் தமத்துஉ: இதில் முதலில் உம்ரா செய்யவேண்டும். பிறகு, ஹஜ் செய்ய வேண்டும். ஆகவே, உம்ரா குறித்த விளக்கத்தை முதலில் பார்ப்போம்.

## உம்ரா செய்தல்

உம்ராவில் நான்கு செயல்கள் உள்ளன.



1. இஹ்ராம்
(உம்ராவை நாடி தல்பியா சொல்வது)



2. தவாஃப்




3. ஸஃயி



4. சிரைத்தல் அல்லது குறைத்தல்

# 1. இஹ்ராம்

உம்ரா செய்பவர் முதலில் 'இஹ்ராம்' என்ற நிலைக்கு வரவேண்டும். இஹ்ராம் என்பது ஹஜ் அல்லது உம்ராவுக்காக ஆயத்தமாகும் நிலையாகும். இந்த நிலைக்கு வந்ததற்குப் பிறகு அவர் மீது சில குறிப்பிட்ட செயல்கள் தடுக்கப்பட்டவையாக ஆகிவிடும். மக்காவைச் சுற்றி ஐந்து இடங்களை அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் நிர்ணயித் தார்கள். அந்த இடங்களுக்கு 'மீகாத்' என்று சொல்லப்படும். அவற்றின் வழியாக வருபவர்கள் அந்த இடங்களிலிருந்து இஹ்ராமைப் பேண வேண்டும்.

## மீகாத் - குறிப்பிட்ட எல்லை

1. துல் ஹுலைபா: இது மதீனாவாசிகளுக்குரிய எல்லையாகும். இது மக்காவிலிருந்து 450 கி.மீ தொலைவில் உள்ளது.
2. அல்ஜுஹ்ஃபா: இது சிரியா, மொராக்கோ, எகிப்து இன்னும் ஜுஹ்ஃபா வழியாக வருபவர்களுக்குரிய எல்லையாகும். இது மக்காவிலிருந்து 183 கி.மீ தொலைவில் உள்ளது.
3. கர்னுல் மனாஸில்: இது நஜ்து பகுதியைச் சேர்ந்தவர்களுக்கு உரியதாகும். இது மக்காவிலிருந்து 75 கி.மீ தொலைவில் உள்ளது.
4. யலம்லம்: இது யமன் மற்றும் யலம்லம் வழியாக வருபவர்களுக்கு உரியது. இதுதான் இந்திய ஹஜ், உம்ரா பயணிகளுக்கும் உரிய எல்லையாகும். இது மக்காவிலிருந்து 92 கி.மீ தொலைவில் உள்ளது.
5. தாது இர்க்: இது ஈராக் வாசிகளின் எல்லையாகும். இது மக்காவிலிருந்து 94 கி.மீ தொலைவில் உள்ளது.

ஹஜ், உம்ராவிற்கு வருபவர்கள் இஹ்ராமைப் பேணாமல் இந்த எல்லைகளைக் கடக்கக் கூடாது. அவ்வாறு கடந்து சென்றுவிட்டால் கண்டிப்பாக மீண்டும் அந்த எல்லைகளில் ஓர் எல்லைக்கு திரும்பிச் சென்று இஹ்ராமை பேணி, மக்காவிற்கு செல்ல வேண்டும். இல்லையெனில் குற்றப் பரிகாரமாக ஓர் ஆட்டை மக்காவில் அறுத்து அங்குள்ள ஏழைகளுக்கு பங்கிட வேண்டும்.

# இஹ்ராமுக்கு முன் செய்யவேண்டியவை

- நகங்களை வெட்டுதல்.
- அக்குல் மற்றும் மர்மஸ்தானத்து முடிகளை நீக்குதல்.
- மீசையை கத்தரித்தல்.
- முடிந்தால் குளித்தல்.
- ஆண்கள் உடலில் மட்டும் நறுமணம் பூசுதல்.
- பெண்கள் வெளியில் வீசாத நறுமணத்தை பயன்படுத்தலாம்.
- ஆண் தைக்கப்பட்ட அனைத்து ஆடைகளையும் கழற்றி விட்டு தைக்கப்படாத இரண்டு வெண்மை நிற ஆடைகளை அணிய வேண்டும்.
- பெண் தாங்கள் அணிகிற ஆடைகளையே அணியலாம். ஆனால் முகத்திரை, கையுறைகள், காலுரைகளை கழற்றி விட வேண்டும். ஆனால் தலையில் முந்தானை போட்டுக் கொள்ளலாம். அதைக் கொண்டு அந்நியர்கள் தங்களுக்கு முன் வந்தால் அப்போது முகத்தை மறைத்துக் கொள்ளலாம். முந்தானை முகத்தை தொட்டாலும் சரியே.
- இஹ்ராமிற்காக தனித்து தொழுகை ஏதும் இல்லை.
- விமானம் அல்லது கப்பல் மூலமாக வரும் பயணிகள், தங்கள் வாகனம் மீகாத்திற்கு மேலாக அல்லது நேராக வரும்போது தல்பியா கூறி இஹ்ராமை ஆரம்பிக்க வேண்டும். ஆகவே, விமானம் மூலமாக செல்லும் பயணிகள் மேற்கூறப்பட்ட ஒழுக்கங்களை பேணி இஹ்ராம் ஆடைகளை வீட்டிலிருந்தே அணியலாம். ஆனால், நிய்யத் (தல்பியா) மீகாத் வரும்போதுதான் சொல்ல வேண்டும்.

## நிய்யத்

ஹஜ் தமத்துஉ செய்பவர் பின்வருமாறு கூற வேண்டும்:

لَبَّيْكَ عُمْرَةً مُتَمَتِّعًا بِـــهَا إِلَى الْحَجِّ

லப்பைக்க உம்ரதன் முதமத்திஅன் பிஹா இலல் ஹஜ்

கருத்து: (அல்லாஹ்வே!) உம்ராவிற்காக உன்னிடம் வந்துள்ளேன். அதற்குப் பிறகு ஹஜ்ஜையும் நாடுகிறேன்.

குறிப்பு: ஹஜ் இன்றி உம்ராவை மட்டும் நாடி வருபவர்கள்,

لَبَّيْكَ عُمْرَةً

'லப்பைக்க உம்ரதன்' என்று கூறவேண்டும்.

பொருள்: (அல்லாஹ்வே!) உம்ராவை நாடி உன்னிடம் வந்துள்ளேன்.

ஹஜ் கிரான் செய்பவர்கள் செய்யவேண்டிய நிய்யத்:

لَبَّيْكَ عُمْرَةً وَحَجًّا

'லப்பைக்க உம்ரதன் வ ஹஜ்ஜன்'

பொருள்: (அல்லாஹ்வே!) உம்ராவையும் ஹஜ்ஜையும் நாடி உன்னிடம் வந்துள்ளேன்.

ஹஜ் இஃப்ராது செய்பவர்கள் செய்யவேண்டிய நிய்யத்:

لَبَّيْكَ حَجًّا

'லப்பைக்க ஹஜ்ஜன்'

பொருள்: (அல்லாஹ்வே!) ஹஜ்ஜை நாடி உன்னிடம் வந்துள்ளேன்.

இதற்குப் பிறகு அதிகமதிகம் தல்பியா சொல்ல வேண்டும்.

## தல்பியா

لَبَّيْكَ اللّٰهُمَّ لَبَّيْكَ

لَبَّيْكَ لَا شَرِيكَ لَكَ لَبَّيْكَ

إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ

وَالْمُلْكَ لَا شَرِيكَ لَكَ

லப்பைக், அல்லாஹும்ம லப்பைக், லப்பைக், லா ஷரீக லக
லப்பைக், இன்னல் ஹம்த வந்நிஅமத லக வல்முல்க,
லா ஷரீக லக.

பொருள்: உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன் அல்லாஹ்வே! உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன்! உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன்! உனக்கு இணை துணை அறவே இல்லை. உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன்! நிச்சயமாக புகழ், அருட்கொடை மற்றும் ஆட்சி ஆகிய அனைத்தும் உனக்கு சொந்தமானவை. உனக்கு இணை துணை அறவே இல்லை.

இவ்வாறு தல்பியா கூறியதற்குப் பிறகு ஹஜ் அல்லது உம்ரா செய்பவர் இஹ்ராம் உடைய நிலையை அடைகிறார். ஆகவே, அவர் இஹ்ராமில் தடை செய்யப்பட்ட காரியங்களை விட்டு விலகி இருக்க வேண்டும்.

ஆண்கள் தல்பியாவை உரத்த குரலிலும் பெண்கள் தாழ்ந்த குரலிலும் கூற வேண்டும். இந்த தல்பியாவை கஅபா சென்று தவாஃபை ஆரம்பிப்பதற்கு முன்புதான் நிறுத்த வேண்டும்.

குறிப்பு: ஹஜ் இஃப்ராது அல்லது கிரான் செய்பவர்கள் துல்ஹஜ் பிறை 10 அன்று கல்லெறியும் வரை தல்பியாவை கூறுவார்கள்.

## கவனிக்க!

- சிலர் இஹ்ராம் ஆடையை அணியும்போதே வலது புஜம் தெரியும்படி அணிகின்றனர். இது தவறாகும். தவஃபுல் குதூம் அல்லது தவாஃபுல் உம்ரா செய்யும்போதுதான் தோள் புஜம் தெரியுமாறு அணியவேண்டும்.

- தைக்கப்படாத வெண்மையான ஆடைகளை அணிவது மட்டும் இஹ்ராம் இல்லை. அது இஹ்ராமிற்குத் தயாராகுவதாகும். நிய்யத் செய்து தல்பியா கூறுவதால் மட்டும்தான் இஹ்ராமுடைய நிலை ஏற்படும்.

- பெண்களுடைய இஹ்ராமிற்காக தனி ஆடை, தனி நிறம் ஏதும் இல்லை. பெண்கள் அலங்கார ஆடைகளைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும். இறுக்கமான, மெல்லிய ஆடைகளைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

- ஆண்கள் இஹ்ராம் ஆடையில் இருக்கும்போது உடலுக்கு மேல் போர்வையில்லாமல், கீழ் ஆடையில் மட்டும் தொழுவதை தவிர்க்க வேண்டும்.

- சிலர் இஹ்ராமுக்கு முன் தாடியைக் குறைக்கின்றனர் அல்லது சிரைக்கின்றனர். இது பெரும் தவறாகும். எந்த நிலையிலும் தாடியைக் குறைப்பதும் சிரைப்பதும் கூடாது. சுன்னத்தை முழுமையாக பேணவேண்டிய இந்த நேரத்தில் தாடியை குறைப்பது அல்லது சிரைப்பது பெரும் தவறாகும்.

- ஒரு முறை அணிந்த இஹ்ராமுடைய ஆடையை எத்தனை முறை வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்.

- எல்லோரும் ஒரே குரலில் தல்பியா கூறுவது ஆதாரமற்ற செயலாகும். அவரவர் தனித்தனியாகவே தல்பியா சொல்ல வேண்டும்.

# 2. தவாஃப்



தவாஃப் செய்வதற்கு உழு அவசியம். பெண்கள் மாதவிடாயை விட்டும், பிரசவ உதிரத்தை விட்டும் நீங்கி இருக்க வேண்டும்.

ஆண்கள் தவாஃப் செய்வதற்கு முன் தங்கள் இஹ்ராமுடைய மேலாடையை வலது கை புஜத்திற்கு கீழிலிருந்து ஆக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு இழ்திபாஉ என்று சொல்லப்படும். (பார்க்க பக்கம் 16)

கஅபாவை நோக்கிச் சென்று ஹஜர் அஸ்வது இருக்கின்ற மூலையிலிருந்து தவாஃபை தொடங்க வேண்டும்.

பிறருக்கு இடையூறு இன்றி, பிறரைத் தள்ளாமல் ஹஜர் அஸ்வது பக்கம் செல்ல வாய்ப்பு இருப்பின் அதனருகில் சென்று முத்தமிட வேண்டும். அப்போது,

بِسْمِ اللهِ اَللّٰهُ أَكْبَرُ

'பிஸ்மில்லாஹி, அல்லாஹு அக்பர்' என்று கூற வேண்டும்.

நேரடியாக முத்தமிட முடியவில்லையெனில், சற்றுத் தூரத்திலி ருந்து அதை வலக்கையால் தொட்டு, கையை முத்துமிட்டுக் கொள்ள வேண்டும்.

அதுவும் முடியவில்லையெனில், வலக்கையில் ஹஜர் அஸ்வதை நோக்கி சைகை செய்து 'அல்லாஹு அக்பர் என்று கூற வேண்டும். பிறகு, கையை முத்தமிடக் கூடாது. தவாஃபைத் தொடங்கும் போது இந்த துஆவை ஓதி ஆரம்பிப்பது ஏற்றமானதாகும்.

اَللّٰهُمَّ إِيــمَانًا بِكَ وَتَصْدِيقًا بِكِتَابِكَ وَوَفَاءً بِعَهْدِكَ

وَاتِّبَاعًا لِسُنَّةِ نَبِيِّكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ

அல்லாஹும்ம ஈமானன் பிக, வதஸ்தீகன் பிகிதாபிக, வ வஃபாஅன் பிஅஹ்திக, வத்திபாஅன் லிசுன்னதி நபிய்யிக முஹம்மதின் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.

துஆ: அல்லாஹ்வே! உன்னை நம்பிக்கை கொண்டு, உன் வேதத்தை உண்மைப்படுத்தி, உன் வாக்கை நிறைவேற்றி, உன் நபி முஹம்மது (ஸல்) அவர்களைப் பின்பற்றி (ஆரம்பிக்கிறேன்).

தவாஃப் என்பது கஅபாவை ஏழு சுற்றுகள் சுற்றுவதாகும். ஒரு சுற்று என்பது ஹஜர் அஸ்வதிலிருந்து புறப்பட்டு, அங்கேயே திரும்பி வருவதாகும்.

முதல் தவாஃபின் முதல் மூன்று சுற்றுகளில் ஆண்கள் மட்டும் 'ரம்லு' செய்ய வேண்டும். அதாவது, காலடிகளை நெருக்கமாக வைத்து சற்று விரைவாக ஓடுவதாகும்.

ஆண்கள் 'ரம்லு' செய்து மூன்று முறை சுற்றிய பின் நான்காவது சுற்றிலிருந்து இறுதிச் சுற்று வரை பொதுவான நடையை மேற்கொள்ள வேண்டும். பெண்களுக்கு 'ரம்லு' இல்லை.

தவாஃபு சுற்றும் போது ஓதுவதற்கு என்று குறிப்பிட்ட திக்ருகளும் இல்லை; துஆக்களும் இல்லை. விரும்பிய திக்ருகளை ஓதலாம்; வேண்டிய துஆக்களை கேட்கலாம்; குர்ஆனும் ஓதலாம்.

தவாஃபுக்கு இடையில் அவசியமான பேச்சுகளை பேசுவது தவறல்ல.

கஅபாவிற்கு நான்கு மூலைகள் உள்ளன. ஹஜர் அஸ்வது உள்ள மூலையை அடைவதற்கு முன் உள்ள மூலைக்கு ‘ருக்னு யமானி’ என்று பெயர். ‘ருக்னு யமானீக்கு அருகில் வரும்போது முடிந்தால் அதை அல்லாஹு அக்பர்’ என்று கூறி வலக்கையால் தொட வேண்டும். தொட முடியவில்லையெனில், சைகை செய்வதோ வேறு ஏதேனும் செய்வதோ கூடாது.

ருக்னு யமானியில் இருந்து ஹஜர் அஸ்வது வரை,

رَبَّنَآ اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ ۝٢٠١

ரப்பனா ஆதினா ஃபித்துன்யா ஹஸனதன் வஃபில் ஆகிரதி ஹஸனதன் வகினா அதாபன்னார்

பொருள்: எங்கள் இறைவா! எங்களுக்கு இம்மையிலும் அழகியதைத் தா! மறுமையிலும் அழகியதைத் தா! நரகத் தண்டனையை விட்டு எங்களைப் பாதுகாத்துக் கொள்!

என்று ஓதுவது சிறப்பாகும். இவ்வாறு, ஹஜர் அஸ்வதிலிருந்து புறப்பட்டு மீண்டும் அங்கேயே வருவது ஒரு சுற்றாகும்.

ஒவ்வொரு முறையும் ஹஜர் அஸ்வதைக் கடக்கும்போது அதை முத்தமிட்டு அல்லது வலக் கையால் தொட்டு கையை முத்தமிட்டு அல்லாஹு அக்பர் என்று கூற வேண்டும். முடியவில்லையெனில், வலக்கையால் சைகை செய்து விட்டு தக்பீர் கூறிச் சென்றுவிட வேண்டும். சைகை செய்த பிறகு கையை முத்தமிடக் கூடாது.

கண்ணியத்திற்குரிய மஸ்ஜிதில் தரை தளம், முதல் தளம், மேல் தளம் என்று கஅபாவை எந்தப் பகுதியிலிருந்து வேண்டுமா னாலும் சுற்றி வரலாம்.

இவ்வாறு ஏழாவது சுற்றை ஹஜர் அஸ்வதில் முடிக்கும்போது ஒரு தவாஃப் முடிவுறுகிறது.

தவாஃப் முடிந்தவுடன் ஆண்கள் திறந்த நிலையில் இருந்த தங்கள் வலது தோள்பட்டையை மறைத்துக் கொள்ள வேண்டும்.

பிறகு, இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். இந்தத் தொழுகையை மகாமு இப்ராஹீம் அருகில் நிறைவேற்றுவது ஏற்றம். பின் வரும் வசனத்தை அங்கு ஓதவேண்டும்.

وَاتَّخِذُوْا مِنْ مَّقَامِ اِبْرٰهٖمَ مُصَلًّى ؕ

வத்தகிதூ மிம்மகாமி இப்ராஹீம முஸல்லா

இந்த தொழுகையில் முதல் ரக்அத்தில் சூரா (109) அல்காபிருன் ஓதுவதும், இரண்டாவது ரக்அத்தில் சூரா (112) இக்லாஸ் ஓதுவதும் ஏற்றம். இத்தொழுகைக்குப் பிறகு வேறு துஆக்கள் இல்லை.

இதற்குப் பிறகு முடிந்தளவு ஸம்ஸம் நீர் குடிக்க வேண்டும். தலையிலும் தெளித்துக் கொள்ளவேண்டும்.



ருக்னு யமானி

ஹஜர் அஸ்வது



# 3. ஸஃயி

## ஸஃயி உடைய விளக்கம்

தவாஃபையும் தொழுகையையும் முடித்தப் பிறகு ஸஃயி செய்வதற்காக ஸஃபா மலை நோக்கிச் செல்ல வேண்டும். ஒரு ஸஃயி என்பது, ஏழு சுற்றுகள் கொண்டதாகும்.






ஸஃபா மலையை நெருங்கியவுடன்,

إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَآئِرِ اللّٰهِ

இன்னஸ் ஸஃபா வல்மர்வத மின் ஷஆயிரில்லாஹி

என்ற (2:158) வசனத்தை ஓத வேண்டும். பிறகு,

أَبْدَأُ بِمَا بَدَأَ اللّٰهُ بِهِ

அப்தஅ பிமா பதஅல்லாஹு பிஹி

பொருள்: அல்லாஹ் தொடங்கியதைக் கொண்டே நானும் தொடங்குகிறேன் என்று கூறவேண்டும்.

ஸஃபா மலையில் ஏறி கஅபாவைப் பார்த்த வண்ணமாக நின்று கொள்ள வேண்டும். (கண்ணால் பார்க்க முடியவில்லையெனில், கஅபாவை முன்னோக்கி நிற்பது போதும்.)

பிறகு, பின்வரும் திக்ரை ஓத வேண்டும்:

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيرٌ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ أَنْجَزَ وَعْدَهُ
وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ

லா யிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, லா ஷரீக லஹு, லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா குல்லி ஷைய்யின் கதீர். லா யிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, அன்ஜஸ வஅதஹு, வநசர அப்தஹு, வஹஸமல் அஹ்ஸாப வஹ்தஹு.

பொருள்: வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையே இல்லை; ஆட்சி அவனுக்கே உரியது; புகழும் அவனுக்கே உரியது; அவன்தான் உயிர் தருகிறான்; மரணத்தையும் தருகிறான்;

அவன் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றல் உள்ளவன். வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்; அவன் தன் வாக்கை நிறைவேற்றினான்; தன் அடிமைக்கு உதவினான்; தனியாகவே (காஃபிர்) இராணுவங்களைத் தோற்கடித்தான்.

இவற்றை மூன்று முறை கூறவேண்டும். ஒவ்வொரு முறைக்குப் பின், அழகிய நபிவழி துஆக்களைக் கேட்க வேண்டும். பிறகு, இறங்கி ஸஃயியைத் தொடங்க வேண்டும். சற்று தூரத்தில் உள்ள பச்சை விளக்கு வந்தவுடன் அடுத்த பச்சை விளக்கு வரும் வரை விரைவாக ஓட வேண்டும்.



பெண்கள் நடந்தே செல்ல வேண்டும். பிறகு, மர்வா நோக்கி நடக்க வேண்டும்.

மர்வாவில் ஏறி, கிப்லாவை முன்னோக்கி நின்று ஸஃபாவில் கூறிய திக்ருகளை மூன்று முறை கூற வேண்டும். இடையிடையே துஆக்கள் கேட்க வேண்டும். இத்துடன் ஒரு சுற்று முடிவுற்றது.

பிறகு, மர்வாவிலிருந்து ஸஃபா நோக்கி நடக்க வேண்டும்.

பச்சை விளக்கு வந்தவுடன் அடுத்த விளக்கு வரும் வரை விரைவாக ஓட வேண்டும்.

ஸஃபா வந்தவுடன் முன்பு கூறியது போன்று மூன்று முறை திக்ருகள் கூறி, இடையிடையே துஆக்கள் கேட்க வேண்டும்.

இத்துடன் இரண்டாவது சுற்று முடிவுற்றது.

பிறகு, முன்பு விவரிக்கப்பட்ட விதத்தில் மர்வா செல்ல வேண்டும். அப்போது மூன்றாவது சுற்று முடிந்துவிடும். இப்படியாக, ஏழாவது சுற்று மர்வாவில் முடியும்.

ஸஃயி செய்யும் போது உழு உடன் இருப்பது சிறப்பு. உழு இல்லையென்றாலும் ஸஃயி கூடிவிடும்.

மாதவிடாய் அல்லது பிரசவத் தொடக்கு உள்ள பெண்களும் ஸஃயி செய்யலாம்.

ஸஃயிக்கு இடையில் குறிப்பிட்ட திக்ருகள், துஆக்கள் எதுவும் இல்லை. விரும்பிய திக்ருகளைக் கூறலாம். வேண்டிய துஆக்களை கேட்கலாம்.

## 4. சிரைத்தல் அல்லது குறைத்தல்

ஏழு சுற்றுகள் முடிந்தவுடன் (ஹஜ் தமத்துஉ அல்லது உம்ரா மட்டும் செய்யும்) ஆண்கள் தலைமுடியை சிரைத்துக் கொள்ள வேண்டும். அடுத்து, ஹஜ் உடைய நாள் நெருக்கமாக இருந்தால், தலைமுடியைக் குறைத்துக் கொள்வதே சிறப்பு. சிரைப்பதை ஹஜ்ஜுக்காக வைப்பது ஏற்றமாகும். பெண்கள் உம்ரா இன்னும் ஹஜ் முடித்த பிறகு தங்கள் தலை முடிகளில் இருந்து விரல் நுனியளவு மட்டும் குறைக்க வேண்டும்.

இத்துடன் உம்ரா நிறைவேறுகிறது இதற்குப் பிறகு, இஹ்ராமில் தடை செய்யப்பட்ட அனைத்து தடைகளும் நீங்கி விடும்.

ஆனால், ஹஜ் இஃப்ராது அல்லது கிரான் செய்பவர்கள் முடியைக் களையக் கூடாது; சிரைக்கக் கூடாது. இவர்கள் அதே இஹ்ராமுடைய நிலையைப் பேணுவார்கள். தடை செய்யப்பட்ட அனைத்து காரியங்களை விட்டும் விலகி இருப்பார்கள்.

மேற்கூறப்பட்ட உம்ராவுடைய முறைதான் பொதுவான காலங்களில் செய்யப்படும் உம்ராவிற்கும் ஆகும்.

# இஹ்ராமுடைய நிலையில் தடுக்கப்பட்டவை



1. எந்த முடியையும் பிடுங்குதல், வெட்டுதல்.
2. நகம் வெட்டுதல்.



3. தலையை மறைத்தல்.



4. கையுறை, காலுறை அணிதல்.



5. தைக்கப்பட்ட ஆடை அணிதல்.



6. பெண் முகத்திரை அணிதல், முகத்தை மறைத்தல் கையுறை அணிதல்.*



7. நறுமணம் பூசுதல்.



8. ஹரம் எல்லையில் உள்ள மரம், செடிகொடிகளைப் பிடுங்குதல்; வெட்டுதல். (இது இஹ்ராமுடைய நிலையிலும் இஹ்ராம் அற்ற நிலையிலும் கூடாது.)

---

*ஆனால், அந்நிய ஆண்களுக்கு முன்னால் செல்ல வேண்டியது ஏற்பட்டால் அல்லது தங்களை அந்நிய ஆண்கள் கடந்து சென்றால், தலை முக்காட்டைக் கொண்டு முகத்தை மறைத்துக் கொள்ளலாம்.



9. ஹரம் உடைய எல்லைகளில் கீழே விழுந்து கிடக்கும் பொருள்களை இஹ்ராமுடைய நிலையிலும் இஹ்ராம் அற்ற நிலையிலும் எடுத்தல்.



10. வேட்டையாடுதல், வேட்டையை காண்பித்து கொடுத்தல்.

11. திருமண ஒப்பந்தம் செய்தல். தனக்கும் செய்து கொள்ளக் கூடாது; பிறருக்கும் செய்து வைக்கக் கூடாது; அப்படிச் செய்தால், அது நிறைவறோது. இதற்குப் பரிகாரம் ஏதும் இல்லை.

12. இச்சையைத் தூண்டும் விளையாட்டில் ஈடுபடுதல், இச்சையுடன் பேசுதல்.

13. உடலுறவு கொள்ளுதல்.

14. தர்க்கம் செய்தல்.

## பரிகாரம்

இஹ்ராமில் தடுக்கப்பட்டவற்றில் முதல் ஏழு காரியங்களில் எதையும் அறிந்த நிலையில் செய்து விட்டால் அதற்காக 'ஃபித்யா' (பரிகாரம்) கொடுக்க வேண்டும். பரிகாரங்கள் பின்வரும் மூன்றில் ஒன்றாகும்.

1. ஆறு ஏழைகளுக்கு உணவளித்தல். (1.020 ஒரு கிலோ இருபது கிராம் கோதுமை அல்லது அரிசி வழங்குதல்.)
2. மூன்று நோன்பு நோற்றல்.
3. ஓர் ஆடு பலியிடுதல்.

இந்த சட்டத்தை அறியாத நிலையில் செய்து விட்டாலோ அல்லது சட்டம் தெரிந்தும் மறந்த நிலையில் இவற்றில் எதையேனும் செய்து விட்டாலோ அவர் மீது குற்றமேதுமில்லை.

# இஹ்ராமிற்குப் பிறகும் அனுமதிக்கப்பட்டவை



கடிகாரம் அணிவது.



இயர்போன் பயன்படுத்துவது.



மோதிரம் அணிவது.



குதிங்காலை மறைக்காத செருப்புகள் அணிவது.



கண் கண்ணாடி அணிவது.



பெல்ட் அணிவது.



கைப் பைகளை அணிவது.



குடை பயன்படுத்துவது.



நிழல், கூடாரங்கள், அறைகளில் ஒய்வெடுப்பது.



உடமைகளை தலையில் சுமப்பது.



காயங்களுக்கு மருந்திடுவது; காயங்களில் பட்டி கட்டுவது.



இஹ்ராமுடைய ஆடைகளை மாற்றிக் கொள்வது; அவற்றைத் துவைத்து அணிந்து கொள்வது.



குளித்துக் கொள்வது. அப்போது தலை அல்லது உடலில் உள்ள முடிகள் உதிர்ந்தாலும் குற்றமில்லை.

# ஹஜ் விளக்கம்
# பிறை 8 மினா செல்லுதல்



உம்ராவை முடித்துவிட்டு ஹஜ்ஜை எதிர்பார்த்து இருக்கும் ஹாஜிகள் யவ்முத் தர்வியா (துல்ஹஜ் பிறை 8) அன்று மீண்டும் இஹ்ராமை ஆரம்பிக்க வேண்டும். ஆகவே முன்பு 17ம் பக்கத்தில் கூறப்பட்டதைப் போன்று இஹ்ராமுக்கு முன் செய்யவேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும். ஆனால், முடிகளைக் களைவது, நகங்களை வெட்டுவது இவற்றை தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

ஆண்கள் இஹ்ராமுடைய ஆடையை அணிந்து, தல்பியா கூறி இஹ்ராமுடைய கட்டுப்பாட்டுக்குள் நுழைய வேண்டும். பெண்கள் முன்பு கூறப்பட்டது போன்றே இஹ்ராமிற்கு என்று அவர்களுக்கு தனி ஆடை இல்லை. தல்பியா மட்டும் கூறினால் போதும்.

ஆனால், ஹஜ் இஃப்ராது அல்லது கிரான் செய்பவர் இஹ்ராமுடைய ஆடை அணிந்தவராகவும், இஹ்ராமுடைய கட்டுப்பாட்டுக்குள்ளும் தான் இருப்பார். எனவே, இவர்கள் தல்பியா மட்டும் கூறி மினா விற்குப் புறப்பட்டுவிட வேண்டும்.

இதற்குப் பிறகு அனைத்து ஆண், பெண் ஹாஜிகளும் இஹ்ரா முடைய நிலையில் தடை செய்யப்பட்ட அனைத்தையும் விட்டு விலகி இருக்க வேண்டும்.

உரத்த குரலில் அதிகமதிகமாக தல்பியா சொல்ல வேண்டும்.

தாங்கள் தங்கியிருக்கும் இடங்களிலிருந்து புறப்பட்டு ளுஹ்ர் தொழுகைக்குள் மினா சென்றடைய வேண்டும். அங்கு பிறை 9 காலை வரை தங்கியிருக்க வேண்டும். அங்கு ஒவ்வொரு தொழுகையையும் அவற்றுக்குரிய நேரத்தில் சுறுக்கி (கஸ்ரு) தொழ வேண்டும். ஃபஜ்ருடைய முன் சுன்னத் மற்றும் வித்ரு, ஆகிய தொழுகைகளைத் தவிர ஏனைய முன் பின் சுன்னத்து தொழுகைகள் இல்லை. பொதுவான நஃபில்கள் உதாரணமாக உழுவுடைய நஃபில், இரவுத் தொழுகை போன்றவற்றைத் தொழலாம். மினாவில் தங்கியிருக்கும்போது அதிகம் தல்பியா ஓதவேண்டும். குர்ஆன் மற்றும் சுன்னத்தான திக்ருகளையும் ஓதலாம்.



மஸ்ஜிதுல் கைஃப் - மினா

# பிறை 9 அரஃபா நாள்



அரஃபா மைதானமும், மஸ்ஜிது நமிராவும்

பிறை 9 அன்று ஸுப்ஹு தொழுதப் பிறகு, சூரியன் நன்கு உதித்தப் பிறகு அரஃபா நோக்கிப் புறப்பட வேண்டும்.

புறப்பட்டதிலிருந்து அரஃபாவில் கூடாரத்தை அடையும் வரை தல்பியா மற்றும் தக்பீர் உரக்கக் கூற வேண்டும்.

தக்பீர் இவ்வாறு சொல்ல வேண்டும்:

اَللّٰهُ أَكْبَرُ اَللّٰهُ أَكْبَرُ اَللّٰهُ أَكْبَرُ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ

اَللّٰهُ أَكْبَرُ اَللّٰهُ أَكْبَرُ اَللّٰهُ أَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ

அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்,
லா யிலாஹ இல்லல்லாஹு, அல்லாஹு அக்பர்.
அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர், அல்லாஹு அக்பர்,
வலில்லாஹில் ஹம்து.

அரஃபாவில் எங்கு வேண்டுமானாலும் தங்கலாம். முடிந்தால் பகல் வெயில் சாயும் வரை நமிரா எனும் பகுதியில் தங்குவது சிறப்பு.

சூரியன் மறையும் வரை அரஃபாவில் தங்கி இருத்தல் வேண்டும்.

லுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகைகளை லுஹ்ர் தொழுகையின் நேரத்தில் இரண்டு இரண்டு ரக்அத்துகளாக தொழ வேண்டும்.

முடிந்தளவு நமிரா பள்ளிவாசலில் நடைபெறும் ஜமாஅத்துடன் இந்த இரண்டு தொழுகைகளை நிறைவேற்ற முயற்சி செய்ய வேண்டும். இல்லையெனில், தங்கி இருக்கின்ற கூடாரங்களில் ஜமாஅத்தாக நிறைவேற்றுதல் வேண்டும். ஜமாஅத் தவறிவிட்டால் தனியாக தொழ வேண்டும்.

'அதான்' கூற வேண்டும்; பிறகு 'இகாமா' கூறி லுஹ்ரை இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். பிறகு, 'இகாமா' கூறி அஸ்ரை இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். பிரார்த்தனைகள் அதிகமாகச் செய்ய வேண்டும்.

لَا إِلَٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلَىٰ كُلِّ شَيْءٍ قَدِيرٌ

லா யிலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு, லா ஷரீக லஹு,
லஹுல் முல்கு, வலஹுல் ஹம்து, வஹுவ அலா
குல்லி ஷையின் கதீர்.

என்ற திக்ரை அதிகமாகக் கூற வேண்டும்.

பிறகு, மாலை ஆக ஆக இரு கரம் ஏந்தி கிப்லாவை முன்னோக்கி அல்லாஹ்விடத்தில் மனம் உருகி துஆ கேட்பதில் ஈடுபட வேண்டும்.

ஹஜ்ஜில் இருப்பவர்கள் அரஃபாவில் தங்கும் அன்று நோன்பு நோற்பது கூடாது.

# சூரியன் மறைந்த பின் முஸ்தலிஃபா நோக்கிப் புறப்படுதல்



பிறை 9 சூரியன் மறைந்த பின் முஸ்தலிஃபா நோக்கிப் புறப்பட வேண்டும்.

கண்ணியத்துடனும், அடக்கத்துடனும், நிதானத்துடனும் செல்ல வேண்டும்.

மக்களை தள்ளுவதோ, இடிப்பதோ தவிர்க்கப்பட வேண்டும். நடந்து சென்றாலும், வாகனத்தில் சென்றாலும் இடம் மற்றும் பாதை விசாலமாகவும், காலியாகவும் இருக்கும் போது மட்டும் விரைவாகச் செல்ல வேண்டும். அப்படி இல்லையெனில், அமைதியாக செல்ல வேண்டும்.

முஸ்தலிஃபா சென்றவுடன் 'அதான்' கூறப்பட்ட பிறகு 'இகாமா' கூறி முதலில் மஃரிப் தொழுகையை நிறைவேற்ற வேண்டும். பிறகு 'இகாமா' கூறி இஷா தொழுகையை நிறைவேற்ற வேண்டும். இரண்டு தொழுகைகளுக்கு இடையே மற்ற தொழுகைகள் தொழக்கூடாது. இஷா தொழுத பிறகும் வித்ரு தொழுகையைத் தவிர வேறு தொழுகைகள் இல்லை.

இரவு முழுக்க அங்கு தங்கி இருக்க வேண்டும்.

முஸ்தலிஃபாவில் எங்கு வேண்டுமானாலும் தங்கலாம்.

ஃபஜ்ர் உடைய நேரம் வந்தவுடன் ‘அதான்’ கூறி சுன்னத் தொழுது, பிறகு ‘இகாமா’ கூறி ஸுப்ஹு தொழுகையை நிறை வேற்ற வேண்டும்.

பலவீனமானவர்கள், இயலாதவர்கள், பெண்கள் இரவின் நடுப்பகுதிக்குப் பிறகு அங்கிருந்து புறப்பட்டு மினா செல்ல அனுமதி உண்டு.

## பிறை 10ஆம் நாள்

ஃபஜ்ர் தொழுத பிறகு முடிந்தால் முஸ்தலிஃபாவில் உள்ள அல்மஷ்அருல் ஹராம் எனும் மலைக்கருகில், நின்று கிப்லாவை முன்னோக்கி, நன்கு விடியும் வரை துஆ மற்றும் திக்ருகளில் ஈடுபட்டிருக்க வேண்டும். முடியவில்லையெனில் முஸ்தலிஃபாவில் எங்கு வேண்டுமானாலும் நின்று துஆ கேட்கலாம்.



மஸ்ஜிது அல்மஷ்அருல் ஹராம்

சூரியன் நன்கு உதித்தவுடன் புறப்பட்டு மினாவிற்கு வர வேண்டும். தல்பியா கூறி அடக்கமாகவும் அமைதியாகவும் செல்ல வேண்டும்.

முஹஸ்ஸர் எனும் பள்ளத்தாக்கை முடிந்தளவு விரைந்து கடக்க வேண்டும்.

பாதையில் அல்லது மினாவில் (விரல் நுனி அளவிலான) ஏழு பொடி கற்களை எடுத்துக் கொள்ள வேண்டும்.

மினா சென்றடைந்தவுடன் கடைசி ஜம்ராவான அகபாவிற்குச் செல்ல வேண்டும். அங்கு தல்பியாவை நிறுத்திவிட வேண்டும்.

ஜம்ராவை முன்னோக்கி மக்கா இடப்பக்கம் இருக்குமாறும், மினா வலப்பக்கம் இருக்குமாறும் நின்று கொள்ள வேண்டும்.

கையில் இருக்கின்ற ஏழு கற்களை ஒன்றன்பின் ஒன்றாக, ஒவ்வொரு முறை எரியும்போதும் தக்பீர் (அல்லாஹு அக்பர்) கூறிய நிலையில் எறியவேண்டும்.




அனுமதி அளிக்கப்பட்டவர்கள் இரவின் நடுப்பகுதிக்குப் பின் மினா சென்றுவிட்டாலும் சூரியன் உதித்த பிறகுதான் ஜம்ரத்துல் அகபாவில் கல் எறிய வேண்டும்.

ஜம்ராவில் கல் எறிந்து விட்டால் தல்பியாவை நிறுத்திக் கொள்ள வேண்டும். பிறகு பலிப்பிராணியை அறுக்கவேண்டும்.

பிறகு தலைமுடியை முற்றிலும் சிரைக்க வேண்டும். அல்லது முடிகளை தலையின் எல்லா இடத்திலிருந்தும் சமமாக குறைக்க வேண்டும்.

பலிப்பிராணிகளை 10, 11, 12, 13 ஆகிய நாட்களில் எதில் வேண்டுமானாலும் அறுக்கலாம்.

கல்லெறிதல், பலியிடுதல், தலைமுடி இறக்குதல் - இந்த மூன்று செயல்களில் குறைந்தபட்சம் எந்த இரண்டை செய்து விட்டாலும் அதன் பிறகு மனைவியுடன் சேர்வதை தவிர இஹ்ராமால் தடை செய்யப்பட்ட அனைத்தும் அனுமதிக்கப்பட்டுவிடும். தைக்கப்பட்ட ஆடை அணியலாம்; நறுமணம் பூசலாம்; இன்னும் பல...

## (பிறை 10) மக்காவிற்குப் புறப்படுதல்

பிறகு ஹாஜிகள் மக்காவிற்கு சென்று கஅபாவை தவாஃப் செய்யவேண்டும்.

இந்த தவாஃபிற்கு தவாஃபுல் ஹஜ், தவாஃபுல் இஃபாழா, தவாஃப் ஸியாரா என்று பெயர் கூறப்படும். முன்பு விவரிக்கப்பட்ட முறையில் தவாஃபை ஆரம்பித்து முடிக்க வேண்டும். இதில் ரம்ள், இழ்திபா இல்லை என்பதை கவனத்தில் வைக்க வேண்டும்

தவாஃப் முடிந்தவுடன் மகாம் இப்ராஹீம் எனும் இடத்தில் அல்லது எங்கு இடம் வசதி இருக்கிறதோ அங்கு இரண்டு ரக்அத்துகள் தொழவேண்டும். பிறகு, முடிந்தளவு ஸம்ஸம் நீர் குடிக்க வேண்டும்.

பிறகு ஹஜ் தமத்துஉ செய்பவர்கள் மட்டும் ஸஃபா, மர்வா மலைகளுக்கு இடையில் ஸஃயி செய்யவேண்டும்.

கிரான் அல்லது இஃப்ராது செய்பவர்கள் ஆரம்பத்தில் மக்கா சென்ற சமயம் தவாஃபுல் குதூம் செய்த பிறகு ஸஃயி செய்திருக்கவில்லை என்றால் இப்போது ஸஃயி செய்யவேண்டும்.

பிறை 10ஆம் நாளை, ஹஜ்ஜின் மகத்தான நாள் (யவ்முல் ஹஜ்ஜில் அக்பர்) என்று அழைக்கப்படுகிறது.

இந்த தவாஃபும் செய்து முடித்துவிட்ட பிறகு இஹ்ராமில் தடை செய்யப்பட்ட எல்லாம் அனுமதிக்கப்பட்டுவிடும்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு மினாவில் வந்து இரவு தங்கவேண்டும்.

ஹஜ்ஜுடைய 10ஆம் நாள் அன்று செய்யவேண்டிய செயல்களின் சுருக்கம்:




1. கல் எறிதல்



2. பலியிடுதல்



3. சிரைத்தல் / குறைத்தல்



4. தவாஃபு
(தமத்துஉ செய்பவர் தவாஃபுடன் ஸஃயியும் செய்தல்)

இவற்றை இந்த முறைப்படி வரிசையாகச் செய்ய வேண்டும். இவற்றை வரிசை மாற்றிச் செய்தால் அதுவும் கூடிவிடும்.

## பிறை 11ஆம் நாள்

இரவில் மினாவில் தங்கவேண்டும்.

தொழுகைகளை ஜமாஅத்துடன் நிறைவேற்ற வேண்டும்.

அல்கீஃப் மஸ்ஜிதில் தொழுகைகளைத் தொழுவது சிறப்பானதாகும். இங்கு எழுபது நபிமார்கள் தொழுது இருக்கிறார்கள்.



தொழுகைகளுக்குப் பிறகு தக்பீர் சொல்லவேண்டும்.

மற்ற நேரங்களிலும் அதிகம் தக்பீர், திக்ருகள் செய்தவாறு இருக்கவேண்டும்.

சூரியன் பகலின் நடுப்பகுதியை கடந்தபின் ஜம்ராக்களுக்குச் சென்று கல் எறியவேண்டும்.

முதலில் சின்ன ஜம்ராவில் நின்று ஏழு கற்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஒவ்வொரு முறையும் தக்பீர் கூறி எறியவேண்டும்.

கல் எறிய நிற்கும்போது முடிந்தால் மக்கா இடப்பக்கமாகவும் மினா வலப்பக்கமாகவும் இருக்கும்படி நின்று கொள்ளவேண்டும்.

கற்கள் எறிந்த பிறகு கிப்லாவை முன்னோக்கி, நீண்ட நேரம் நின்று துஆ கேட்க வேண்டும்.

பிறகு, நடு ஜம்ராவிற்குச் சென்று முதல் ஜம்ராவில் செய்தது போன்று ஏழு கற்கள் ஒன்றன்பின் ஒன்றாக தக்பீர் கூறி எறிய வேண்டும்.

பிறகு, அங்கும் கிப்லாவை முன்னோக்கி நின்று, நீண்ட நேரம் துஆ கேட்கவேண்டும்.

பிறகு, ஜம்ரதுல் அகபா செல்லவேண்டும். அங்கு மேற்கூறிய முறையில் ஏழு கற்களை ஒன்றன் பின் ஒன்றாக எறிந்த பிறகு நிற்காமல் உடனே திரும்பிவிட வேண்டும்.

இயலாதவர்கள் கல்லெறியும் விஷயத்தில் பின்வரும் சலுகைகளைப் பெறுகின்றனர்.

1. அவர்கள் மினாவில் தங்குவதை விடுவது குற்றமில்லை.
2. இரண்டு நாட்களுக்குரிய கற்களை ஒரே நாளில் எறிந்து விடலாம்.
3. இரவிலும் எறியலாம்.
4. கர்ப்பிணிப் பெண்கள் நீண்ட தூரம் நடப்பதை பயந்தால் வேறு ஒருவரை தங்கள் சார்பாக கற்கள் எறிய நியமிக்கலாம்.

## பிறை 12ஆம் நாள்

மினாவில் இரவு, பகல் என எல்லா நேரங்களிலும் நன்மைகள் செய்வது, அல்லாஹ்வை அதிகம் திக்ரு செய்வது, குர்ஆன் ஓதுவது, பிறருக்கு உதவுவது, அறிவுரை கேட்பது, அறிவுரை கூறுவது போன்ற நல்ல விசயங்களில் ஈடுபட வேண்டும்.

நேரங்களை வீணடித்தல், வீண் பேச்சுகளில் ஈடுபடுதல் முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டும்.

ளுஹ்ர் தொழுகைக்குப் பிறகு மூன்று ஜம்ராக்களிலும் கல் எறியச் செல்ல வேண்டும். பிறை 11ஆம் நாள் சொல்லப்பட்ட ஒழுக்கங்களின்படி கல் எறிய வேண்டும்.

விரைவாக, ஊர் திரும்ப விரும்புகிறவர் பிறை 12ஆம் நாளன்று கல் எறிந்துவிட்டு அங்கிருந்து வெளியேறிவிடலாம். ஆனால் சூரியன் மறைவதற்குள் மினாவை விட்டு வெளியேறிவிட வேண்டும்.

அப்படி வெளியேறிவிட்டவர் மக்கா சென்று இறுதியாக, ‘தவாஃபுல் விதாஃ’ செய்துவிட்டு ஊர் திரும்பலாம்.

## பிறை 13ஆம் நாள்

எவர் பிறை 13ஆம் நாள் இரவு அன்றும் மினாவில் தங்கி விடுகிறாரோ அவர் பகலிலும் இருந்து பிறை 11, 12ஆம் நாளன்று செய்தவாறு ளுஹ்ர் தொழுகைக்குப் பிறகு மூன்று ஜம்ராக்களிலும் கல் எறியச் செல்ல வேண்டும்.

# ஹஜ் கிரியைகள் விளக்கப் படம்

பிறை
8
மினா



இஹ்ராமைப் பேணி, தல்பியாக் கூறி மினா புறப்படுதல். ளுஹ்ர், அஸ்ர், மக்ரிப், இஷா, ஸுப்ஹு தொழுகைகளை தனித் தனியாக தொழுதல். நான்கு ரக்அத் தொழுகைகளை கஸ்ரு செய்தல்.

பிறை
9
அரஃபா



ளுஹ்ர், அஸ்ர், தொழுகைகளை சேர்த்து, கஸ்ரு செய்து ளுஹ்ர் நேரத்தில் தொழுதல் துஆவில் ஈடுபடுதல்

சூரியன்
மறைவு



தல்பியா, தக்பீர் கூறி அமைதியாக முஸ்தலிஃபா நோக்கி புறப்படுதல். அங்கு இரவு தங்குதல்

முஸ்தலிஃபா



மக்ரிப், இஷா தொழுகைகளைச் சேர்த்து இஷாவுடைய நேரத்தில் தொழுதல். இஷாவை மட்டும் கஸ்ரு தொழுதல். ஸுப்ஹு தொழுதல். துஆவில் ஈடுபடுதல்.

பிறை 10
பகல்
மினா



பெரிய ஜம்ராவில் கல்லெறிதல், பலியிடுதல், சிரைத்தல் அல்லது குறைத்தல், தவாஃப், ஸஃயி செய்தல். மீண்டும் மினாவில் இரவு தங்குதல்.

பிறை
11, 12, 13
மினா



மூன்று ஜம்ராக்களில் கல் எறிதல், ஐந்து நேரத் தொழுகைகளை அவை ஒவ்வொன்றுக்கும் உரிய நேரத்தில் தொழுதல், அல்லாஹ்வை அதிகம் திக்ரு செய்தல், தக்பீர் சொல்லுதல்.

## மினாவில் நடைபெறும் சில தவறுகள்

மினாவில் தங்கி இருக்கும்போது தொழுகைகளை ஒன்றை மற்றொன்றுடன் சேர்த்து தொழுவது (ஜம்உ செய்வது).

ஃபஜ்ர் உடைய முன் சுன்னத், இஷாவிற்கு பின் வித்ரு ஆகிய தொழுகைகளைத் தவிர ஏனைய முன் பின் சுன்னத்துகள் தொழுவது.

குர்ஆன் அதிகம் ஓதாமல் இருப்பது.

பிறை 9 இரவில் மினாவில் இரவு தங்காமல் அரஃபாவிற்குச் சென்று விடுவது.

## அரஃபாவில் நடைபெறும் தவறுகள்

அரஃபாவுடைய எல்லைகளின் ஆரம்பமும் முடிவும் நான்கு பக்கங் களிலும் தெளிவாக அடையாளமிடப்பட்டிருக்க அதைக் கண்டு கொள்ளாமல் பலர் அரஃபாவிற்கு வெளியில் தங்கிவிடுகின்றனர்.

பலர் சூரியன் மறைவதற்கு முன்னரே அரஃபாவிலிருந்து வெளியேறி விடுகின்றனர்.

பலர் அரஃபாவில் உள்ள மலையில் ஏற முயல்கின்றனர் அல்லது அங்கு செல்ல முயல்கின்றனர். பலர் அங்குள்ள மலையை, மரத்தை, மண்ணைத் தொட்டுத் தடவிக் கொள்கின்றனர்.

பலர் பிரார்த்தனை செய்யும்போது கிப்லாவைப் பின்னோக்கினாலும் பரவாயில்லை என்று ரஹ்மத் மலையை முன்னோக்குவதில் ஆர்வம் காட்டுகின்றனர்.

அரஃபா நாளில் வணக்க வழிபாட்டில் ஈடுபடாமல் வீண் விளையாட்டு, சிரிப்பு, சுற்றிப்பார்த்தல், இங்குமங்கும் அலைதல் போன்ற செயல்களில் ஈடுபடுகின்றனர். இது பெரும் தவறாகும்.

பலர் மொபைல் போன்களில் விளையாடுகின்றனர்.

பலர் சூரியன் மறைவதற்கு முன் உள்ள நேரத்தைப் பயணத்திற்கு ஆயத்தமாகுவதில் கழித்துவிட்டு துஆவில் ஈடுபடுவதை தவறவிட்டு விடுகின்றனர்.

## முஸ்தலிஃபாவில் நடைபெறும் தவறுகள்

பலர், கிப்லாவுடைய திசையை கவனிக்காமல் தொழுகைக்கு வேறு திசையை நோக்கி நின்றுவிடுகின்றனர்.

ஜம்ராவில் கல்லெறிய முஸ்தலிஃபாவிலேயே பலர் கல் பொறுக்கத் தொடங்கி விடுகின்றனர். இதைக் கட்டாயமாகக் கருதுகின்றனர். (கல் எங்கிருந்து வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளலாம்.)

முஸ்தலிஃபாவின் எல்லையை கவனத்தில் கொள்ளாமல் நினைத்த இடத்தில் இரவு தங்கிவிடுகின்றனர். இவ்வாறு தங்குவது கூடாது.

இரவின் நடுப்பகுதி வருவதற்குள் மஃரிபு, இஷா தொழுகையை நிறைவேற்றிவிடாமல் தாமதப்படுத்துவது கூடாது.

(இரவு நடுப்பகுதி வருவதற்குள் முஸ்தலிஃபா செல்ல முடியாது. என்று அச்சப்பட்டால் வழியில் மஃரிபு, இஷா தொழுகைகளை நிறைவேற்ற வேண்டும்.)

பலர் இரவின் நடுப்பகுதிக்குப் பிறகு முஸ்தலிஃபாவை விட்டுவிட்டு மினா புறப்பட்டு விடுகின்றனர். முழு இரவும் அங்கு தங்குவதில்லை.

சூரியன் உதயமாவதற்கு முன் முஸ்தலிஃபாவை விட்டு பலர் மினா விற்கு சென்று விடுகின்றனர். (பலவீனர்களைத் தவிர மற்றவர்கள் சூரியன் உதித்த பிறகுதான் மினாவிற்குச் செல்ல வேண்டும்.)

முஸ்தலிஃபாவில் இரவு விழித்திருப்பது.

ஃபஜ்ரு தொழுகைக்குப் பிறகு துஆ கேட்காமல் மினா செல்வது.

துஆ கேட்கும்போது கைகளைத் தூக்காமல் இருப்பது.

சூரியன் உதிக்கும் நேரம் வரை ஸுப்ஹு தொழுகையை தாமதப்படுத்துவது. அல்லது சூரியன் உதித்தப் பிறகு தொழுவது.

ஸுப்ஹு தொழுகைக்குப் பிறகு தூங்குவது.

வாகனத்தில் செல்பவர்கள் மற்ற மக்களுக்கு இடையூறு தரும் வண்ணம் விரைந்து செல்வது.

நடந்து செல்பவர்கள் வாகனங்களை கவனத்தில் கொள்ளாமல் இடையூறு தரும் வண்ணம் செல்வது.

பிறை 10, 11, 12, 13 ஆகிய நாட்களுக்குரிய கற்களை முஸ்தலிஃபா விலேயே எடுப்பது.

கற்களை கழுவுவதும் தவறு.

## பிறை 10ல் நடைபெறும் சில தவறுகள்

ஜம்ராவில் கல்லெறியும் இடத்திற்கு அருகில் நிற்காமல் தொலைவில் நின்று கல் எறிவது.

உடல் வலிமை பெற்றும் உடல் சுகத்துடன் இருந்தும் பிறரைக் கல் எறிய அனுப்புவது.

செருப்பு, பெரிய கற்கள் இன்னும் இவை போன்றவற்றை எறிவது.

எறியும்போது தக்பீரைத் தவிர வேறு துஆக்கள் கூறுவது.

கல் எறிந்து விட்டு துஆ கேட்பது.

ஜம்ராவில் பின்பக்கமாக நின்று கொண்டு கல் எறிவது.

கல் எறியும் இடங்களில் ஷைத்தான் இருக்கிறான் என்று நம்புவது.

ஜம்ராத்துகளை பெரிய ஷைத்தான், நடு ஷைத்தான், சின்ன ஷைத்தான் என்று கூறுவது.

சிலர் தலைமுடியைச் சிரைக்கும்போது தாடியையும் சிரைக்கின்றனர். இது பாவமான செயலாகும். தாடியை வளர்ப்பது அவசியம்.

குர்பானிப் பிராணியை அறுத்த பிறகு அதைப் பயன்படுத்தாமல் வீணடிப்பது.

தவாஃபுல் இஃபாழா மற்றும் தவாஃபுல் விதா செய்யும்போது 'ரம்ல்' குதித்துக் குதித்து விரைந்து ஓடுவது.

ஹஜர் அஸ்வதை முத்தமிட கடுமையாக நெருக்கடி ஏற்படுத்துவது,

மற்ற முஃமின்களுக்குத் தொந்தரவு செய்வதும் அதற்காக ஒருவர் மற்றவரைத் தள்ளுவதும் சண்டையிட்டுக் கொள்வதும் கூடாது.

பலர் ஹஜர் அஸ்வதை தொட்டவுடன் தங்கள் கைகளை முகம், உடலின் ஏனைய பாகங்களில் தடவிக் கொள்கின்றனர். இது அறியாமையாகும்.

ஹாஜிகளில் பலர் கஅபாவின் எல்லா மூலைகளையும் தொடுகின்றனர். கஅபாவின் சுவர்களைத் தடவுகின்றனர். கைகளாலும் துணிகளாலும் முகத்தாலும் தேய்க்கின்றனர். இது பெரும் தவறும் வழிகேடுமாகும். ஏனெனில், நபி ﷺ அவர்கள் இவ்வாறு செய்ததில்லை. நபி ﷺ அவர்கள் ஹஜர் அஸ்வது, ருக்னு யமானி ஆகிய இரு மூலைகளைத் தவிர வேறு இடங்களைத் தொட்டதில்லை.

ருக்னு யமானியை இடது கையால் தொடுவது, இன்னும் அதை முத்தமிடுவது. (இதை வலக்கையால் தடவுவது மட்டுமே சுன்னத் ஆகும்.)

தவாஃபின் ஒவ்வொரு சுற்றிலும் ஒரு குறிப்பிட்ட துஆவை ஓதுவதைக் கடமையாக்கிக் கொள்வது தவறாகும்.

கூட்டமாக துஆச் செய்வது பித்அத்தாகும். நபி (ஸல்) அவர்களும் நபித்தோழர்களும் இப்படிச் செய்ததில்லை.

மகாம் இப்றாஹீமுக்குப் பின்னால் தொழுவதற்காக சண்டையிடுவது.

அவ்வாறே, தவாஃபில் கூட்டம் அதிகமாக இருக்கும்போது மகாமுக்குப் பின்னால் தொழுவது. (இது போன்ற சமயத்தில் மஸ்ஜிதில் எங்கு வேண்டுமானாலும் தொழலாம்.)

தவாஃபுக்குப் பிறகு தொழுகையை நீட்டித் தொழுவது, அதற்குப் பிறகு கையைத் தூக்கி துஆ கேட்பது.

பலர் ஒன்றாக கைகோர்த்துக் கொண்டு பிற ஹாஜிகளுக்கு இடையூறு தருகின்ற வகையில் தவாஃப் செய்வது.

ஹத்தீமுக்குள் தவாஃப் செய்வது. (ஹத்தீமுக்கு வெளியில்தான் தவாஃப் சுற்றவேண்டும்.)

ருக்னு யமானியைத் தொடமுடியவில்லை என்றால் அதைப் பார்த்து கை காண்பித்து தக்பீர் சொல்வது.

மினாவில் தொழுகைகளைச் சேர்த்துத் தொழுவது.

மினாவில் இரவு தங்காமல் இருப்பது.

## பிறை 11, 12, 13 ல் நடைபெறும் சில தவறுகள்

சிறிய மற்றும் நடு ஜம்ராவில் கல் எறிந்த பின் துஆ கேட்காமல் சென்று விடுவது.

சூரியன் நடுப்பொழுதை அடைவதற்கு முன் கல் எறியச் செல்வது.

கடுமையான கோபத்துடனும் முரட்டுத்தனத்துடனும் கத்திக் கொண்டும் அங்கு ஷைத்தான் இருக்கிறான், அவனை இக்கற்களைக் கொண்டு எறிகிறோம் என்ற எண்ணத்திலும் பலர் நடந்து கொள்கின்றனர். இது மிகப்பெரிய மடமையாகும்.

கற்களை எறிவது ஒரு வணக்கமாகும். அதன் நோக்கம் அல்லாஹ்வின் நினைவை நிலை நிறுத்துவதாகும். எனவேதான் ஒவ்வொரு கல்லை எறியும்போது நபி ﷺ அவர்கள் தக்பீர் சொல்வார்கள்.

ஜம்ரதுல் அகபா (கடைசி பெரிய ஜம்ரா)வில் கல் எறிந்த பின் துஆ (பிரார்த்தனை) செய்வது.

பலர் கல் எறியும்போது முதலில் ஜம்ரதுல் அகபாவில் எறிகின்றனர். பிறகு, நடுவிலும் பிறகு, சிறிய ஜம்ராவிலும் எறிகின்றனர். (இது தவறாகும். மாறாக, முதலில் சிறிய ஜம்ரா, பிறகு நடு ஜம்ரா, பிறகு ஜம்ரதுல் அகபாவில் எறிய வேண்டும்.)

பலர் ஏழு கற்களையும் ஒரே முறையில் எறிகின்றனர். (இது பெரும் தவறாகும். அப்படி எறிந்தாலும் அது ஒரு முறை எறிந்ததாகத்தான் கருதப்படும். ஏழு முறை எறிந்ததாக ஏற்றுக் கொள்ளப்படாது.)

பலர் சோம்பேறித்தனத்தால் தாங்களே கல் எறியச் செல்லாமல்

பிறரிடம் கொடுத்து அனுப்புகிறார்கள். இது பின்வருகின்ற இறைக் கட்டளைக்கு மாற்றமாகும்.

அல்லாஹ் கூறுகிறான்: அல்லாஹ்வுக்காக (ஆரம்பம் செய்த) ஹஜ்ஜையும் உம்ராவையும் நீங்கள் முழுமையாக்குங்கள்.

(அல்குர்ஆன் 2:192)

பலர் 11ஆம் நாளன்று கல் எறிந்துவிட்டு 12ஆம் நாளன்று எறியவேண்டிய கல்லைப் பிறரிடம் கொடுத்துவிட்டு 11 அன்று மாலையே மினாவிலிருந்து புறப்பட்டு விடுகின்றனர். (இது தவறாகும்.)

பலர் பிறை 10ஆம் நாளன்று முதலில் கல் எறியச் செல்லாமல் மக்கா சென்று தவாஃப் ஸியாரா செய்கின்றனர். பின்னர், கல் எறிந்து விட்டு ஊர் சென்றுவிடுகின்றனர். (இது தவறாகும்.)

## ஒளிமிகு மதினாவும்
## சிறப்புமிகு மஸ்ஜிது நபவியும்



மதீனா, இங்குதான் அல்லாஹ்வின் தூதர் ﷺ குடிபெயர்ந்தார்கள். தங்களது வாழ்க்கையின் இறுதிப் பகுதியை இங்குதான் கழித்தார்கள். அவர்கள் இறந்தப் பின் இங்குதான் அடக்கம் செய்யப்பட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் ﷺ கூறினார்கள்:

நிச்சயமாக ஈமான் (இறைநம்பிக்கை) மதீனாவில் ஒதுங்கிவிடும், பாம்பு தன் பொந்தில் ஒதுங்குவதைப் போன்று.

(அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ நூல்: ஸஹீஹுல் புகாரி)

மஸீஹ் தஜ்ஜாலின் பயம் மதீனாவில் நுழையாது. அதற்கு அந்நாளில் ஏழு வாசல்கள் இருக்கும். அவை ஒவ்வொன்றிலும் இரண்டு வானவர்கள் இருப்பார்கள்.

(அறிவிப்பாளர்: அபூபக்ரா ﵁ நூல்: ஸஹீஹுல் புகாரி)

இங்கு அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கட்டிய மஸ்ஜித் இருக்கிறது. பயணித்துச் சென்று வணக்க வழிபாடுகள் செய்வதற்கு தகுதியான மூன்று மஸ்ஜிதுகளில் இது இரண்டாவது மஸ்ஜிதாகும்.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

மூன்று மஸ்ஜிதுகளுக்கே தவிர (வழிபாட்டுப்) பயணங்கள் மேற்கொள்ளக் கூடாது. 1. அல்மஸ்ஜிதுல் ஹரம். 2. அல்லாஹ்வின் தூதருடைய மஸ்ஜித். 3. அல்மஸ்ஜிதுல் அக்ஸா.

(அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁ நூல்: ஸஹீஹுல் புகாரி)

ஹஜ் உம்ரா வணக்கங்களில் மஸ்ஜிது நபவிக்கு செல்வது உள் அடங்காது. மஸ்ஜிது நபவிக்குச் செல்வது தனி ஒரு விரும்பத் தகுந்த (முஸ்தஹப்) வணக்கமாகும். இதற்கு இஹ்ராமோ குறிப்பிட்ட ஆடையோ குறிப்பிட்ட நேரமோ இல்லை. எப்போது வேண்டு மானாலும் அங்கு செல்லலாம். அங்கு செல்வதற்கு தனி சிறப்புகள் உள்ளன.

அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்கள் கூறினார்கள்:

எனது இந்த மஸ்ஜிதில் தொழப்படும் ஒரு தொழுகை வேறு மஸ்ஜிதில் தொழப்படும் ஆயிரம் தொழுகைகளைவிட சிறந்ததாகும். ஆனால், அல்மஸ்ஜிதுல் ஹராமில் தொழப்படும் ஒரு தொழுகை மற்ற மஸ்ஜிதில் தொழப்படும் நூறாயிரம் தொழுகைகளைவிட சிறந்தது. (அறிவிப்பவர்: ஜாபிர் ﵁ நூல்: ஸுனன் இப்னு மாஜா)

ஆகவே, மதீனா செல்பவர் மஸ்ஜிது நபவியில் தொழுவதற்குச் செல்கிறேன் என்ற எண்ணத்தில் செல்ல வேண்டும். அங்கு சென்று தொழுத பிறகு நபி ﷺ அவர்களின் (கபுர்) அடக்கத்தளத்திற்குச் சென்று ஸலாம் சொல்ல வேண்டும். நபி ﷺ அவர்களின் கபுரை ஜியாரத்து செய்யச் செல்கிறேன் என்ற எண்ணத்தில் செல்வது கூடாது.

இது ஹதீஸ் கலை அறிஞர்களின் தீர்ப்பாகும். ஏனெனில், நபி அவர்களின் கபுரை ஜியாரத்து செய்வது குறித்து அறிவிக்கப்படும் அனைத்து ஹதீஸ்களும் ஒன்று பலவீனமானவை அல்லது பொய்யானவை. இதை கண்ணியத்திற்குரிய ஹாஜிகள் கவனத்தில் கொள்ளவும்.

மஸ்ஜிது நபவிக்குள் நுழையும்போது வலது காலை உள்ளே வைத்து

أَعُوذُ بِاللهِ الْعَظِيمِ وَبِوَجْهِهِ الْكَرِيْمِ وَسُلْطَانِهِ الْقَدِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ بِسْمِ اللهِ وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلَىٰ رَسُولِ اللهِ اَللّٰهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ

அஊது பில்லாஹில் அளீம், வபிவஜ்ஹிஹில் கரீம்,
வசுல்தானிஹில் கதீம் மினஷ் ஷைத்தானிர் ரஜீம்.
பிஸ்மில்லாஹி வஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலா ரசூலில்லாஹ்.
அல்லாஹும் மஃப்தஹ்லீ அப்வாப ரஹ்மதிக.

என்று பிரார்த்திக்க வேண்டும்.

பிறகு, இரண்டு ரக்அத்துகள் மஸ்ஜிதின் காணிக்கைத் தொழுகை நஃபில் தொழவேண்டும். முடிந்தால் ரவ்ழாவில் தொழுவது சிறப்பு. நபி ﷺ அவர்களின் வீட்டுக்கும் அவர்களுடைய (மிம்பர்) பிரசங்க மேடைக்கும் இடையில் உள்ள இடம் ரவ்ழா ஆகும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

எனது வீட்டுக்கும் எனது மிம்பருக்கும் இடையில் உள்ள இடம் ரவ்ழா - சொர்க்க பூங்காக்களில் ஒரு பூங்காவாகும். எனது மிம்பர் எனது ஹவ்ழுக்கு மேல் இருக்கிறது.

(அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه நூல்: ஸஹீஹுல் புகாரி)

அங்கு தொழ முடியவில்லையெனில் மஸ்ஜிதில் எங்கு வேண்டுமானாலும் தொழலாம். பிறகு, அல்லாஹ்வின் தூதர் ﷺ அவர்களுடைய கபுருக்குச் சென்று அதை முன்னோக்கி நின்றவராக,

اَلسَّلاَمُ عَلَيْكَ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ يَانَبِيَّ اللهِ صَلَّى اللهُ عَلَيْكَ وَسَلَّمَ اَلسَّلاَمُ عَلَيْكَ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ يَارَسُوْلَ اللهِ صَلَّى اللهُ عَلَيْكَ وَسَلَّمَ

அஸ்ஸலாமு அலைக்க வ ரஹ்மதுல்லாஹி வ பரகாதுஹு
யா நபிய்யல்லாஹ், ஸல்லல்லாஹு அலைக்க வஸல்லம்.
அஸ்ஸலாமு அலைக்க வ ரஹ்மதுல்லாஹி வ பரகாதுஹு
யா ரசூலல்லாஹ், ஸல்லல்லாஹு அலைக்க வஸல்லம்.

இவ்வாறு ஸலாம் கூற வேண்டும்.




பிறகு, வலது பக்கம் கொஞ்சம் நகர்ந்து அபூபக்ர் رضي الله عنه அவர்களின் கபுருக்கு முன் நின்று,

اَلسَّلاَمُ عَلَيْكَ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ يَاأَبَابَكْرٍ يَاخَلِيْفَةَ يَارَسُوْلِ اللهِ رَضِيَ اللهُ عَنْكَ وَجَزَاكَ اللهُ خَيْرًا

அஸ்ஸலாமு அலைக்க வ ரஹ்மதுல்லாஹி வ பரகாதுஹு

யா அபா பக்ரின், யா கலீபத ரசூலில்லாஹி. ரழியல்லாஹு அன்க வ ஜஸாகல்லாஹு கைரன்.

இவ்வாறு ஸலாம் சொல்லவேண்டும். பிறகு வலது பக்கம் கொஞ்சம் நகர்ந்து உமர் ﵁ அவர்களின் கபுருக்கு முன் நின்று.

اَلسَّلاَمُ عَلَيْكَ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ يَاأَمِيْرَالْمُؤْمِنِيْنَ يَا عُمَرَ بْنَ الْخَطَّابِ رَضِيَ اللهُ عَنْكَ وَجَزَاكَ اللهُ خَيْرًا

அஸ்ஸலாமு அலைக்க வ ரஹ்மதுல்லாஹி வ பரகாதுஹு யா அமீரல் முஃமினீன், யா உமரப்னல் கத்தாப். ரழியல்லாஹு அன்க வ ஜஸாகல்லாஹு கைரன்.

இவ்வாறு ஸலாம் சொல்ல வேண்டும்.

நபி ﷺ அவர்களின் மஸ்ஜிதுக்கு அருகில் உள்ள பொது கபுருஸ்தானாகிய பகீவுல் கர்கத் சென்று அங்கு அடக்கம் செய்யப் பட்டவர்களுக்கு,


பகீவுல் கர்கத்

اَلسَّلاَمُ عَلَيْكُمْ أَهْلَ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِيْنَ وَالْمُسْلِمِيْنَ وَإِنَّا

إِنْ شَاءَ اللهُ لَلَاحِقُونَ أَسْأَلُ اللهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ

அஸ்ஸலாமு அலைக்கும் அஹ்லத் தியாரி மினல் முஃமினீன வல் முஸ்லிமீன். வ இன்னா இன்ஷாஅல்லாஹு லலாஹிகூன். அஸ்அலுல்லாஹ லனா வ லகுமுல் ஆஃபியா.

இவ்வாறு ஸலாம் சொல்ல வேண்டும்.

அவ்வாறே, உஹுதுப் போரில் கொல்லப்பட்ட ஷஹீதுகளுக்குச் சென்று ஸலாம் சொல்ல வேண்டும்.


உஹுது ஷஹீதுகளின் கப்ருகள்

தான் இருக்குமிடத்தில் ஒழு செய்து பிறகு குபா மஸ்ஜிதுக்குச் சென்று இரண்டு ரக்அத்துகள் தொழுவது சுன்னாவாகும்.


மஸ்ஜிது குபா

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: எவர் தன் இல்லத்தில் ஒழுச் செய்து விட்டு குபாவின் மஸ்ஜிதுக்குச் சென்று தொழுவாரோ அவருக்கு ஓர் உம்ராவின் கூலி கிடைக்கும்.

(அறிவிப்பாளர் ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் ؓ நூல் இப்னு மாஜா)

மேற்கூறப்பட்ட இடங்களைத் தவிர வேறு இடங்களுக்கு நன்மையை நாடிச் செல்வது நபிவழியல்ல.

## கவனிக்க!

மஸ்ஜிது நபவியில் உள்ள தூண்களை கட்டிப்பிடித்து அழுவது, அவற்றைத் தொட்டு முத்தமிடுவது, தொட்டுத் தடவிக் கொள்வது, நபி ﷺ அவர்களின் பொருட்டால் துஆ கேட்பது, தங்கள் தேவைகளை நபி ﷺ அவர்களிடம் கேட்பது, நபி ﷺ அவர்களிடம் எங்களுக்கு சிபாரிசு செய்யுங்கள் என்று கூறுவது, தாங்கள் கூறும் ஸலாமுக்கு நபி ﷺ அவர்கள் கூறுகிற பதில் எங்களுக்கு கேட்கிறது என்று நம்புவது. மதீனாவில் தங்கியிருக்கும்போது செருப்புகள் இன்றி நடப்பது, அங்குள்ள மண்ணை எடுத்துக் கொள்வது இவையெல்லாம் தவிர்க்கப்படவேண்டிய நம்பிக்கைகளும் செயல்களுமாகும்.

அகிலங்களின் இறைவன் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் ஸலவாத்தும் ஸலாமும் அவனுடைய தூதர் மீதும், குடும்பத்தார், தோழர்கள் மீதும் நிலவட்டும்.